உ

சிவமயம்.

# திருப்போரூர்ப்
# பிரணவாசலமாலை.

திவ்யதேஜோமயஅகண்டாகார பரிபூரண
சச்சிதாநந்த சொரூபாநுபூதி பெற்றுள்ள
திருப்போரூர்ச்
சிதம்பரசுவாமிகள் ஆதீனம்
ஒன்பதாவதுபட்டம்

## முத்துக்குமாரசுவாமிகள்

இயற்றியது.
இஃது
ஷைதேவஸ்தாநம்
தருமகர்த்தரில் ஒருவரும்
கடம்பூர்-சுரோத்திரதாருமாகிய
அப்பாசாமிமுதலியார் - சகோதரர்

## வேதகிரிமுதலியார்

கேட்டுக்கொண்டபடி
புரசை-அஷ்டாவதாநம்

## சபாபதிமுதலியார்

முன்னிலையிற்பார்வையிட்டு
புங்கத்தூர்

மு - சபாபதிமுதலியாரது
கல்விவிளக்கஅச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டது.

குரோதன௵-ஆவணி௴.

உ

இஃது

திருமழிசை-வையாபுரிஐயர்குமாரரும்,
புரசை-அஷ்டாவதாநம்-சபாபதிமுதலியார்
மாணாக்கரில் ஒருவருமாகிய
சதுர்த்தாவதாநம்

# அருணாசலஐயரவர்களியற்றிய

கட்டளைக்கலித்துறை.

முத்துக்குமாரவடிவினைப்பெற்றருண்முக்கணன்மேல்
முத்துக்குமாரவடிவேலன்றாளைமுடிதரித்து
முத்துக்குமாரமுனிவன்செய்மாலையைமூவுலகின்
முத்துக்குமாரமெனவேயெவருமொழிகுவரே.

சதுரங்கபட்டணம்.

# சுப்பராயஐயர்பாடிய

ஆசிரியவிருத்தம்.

மணிகொணெடுவாரியிற்றுயிலுமாதவனுமெழில்
வனசமலரவனுமறியா
வளர்சமரபுரிமருவுமோங்காரசிகரிமிசை
மன்னுகைலாசபதிமேல்
அணிகொள்பிரணவசைலவரியசெந்தமிழ்மாலை
யாறுமாமுகதேவனுக்
கன்புசெய்தருள்பெற்றுமகிழ்சிதம்பரதேவ
ராதீனவதுலவினிய
தணிவுபெறுசாத்திகதயாபரபுராதன
தவத்தின்முடிவானயோகு
தானனதற்பரசிதாகாசசின்மய
ததாகாரதருமசீல
நணிமருவுமுத்துக்குமாரசுவாமிப்புநித
னலனுறநவின்றனனதை
நானிலந்தனிலோதியுட்பொருளுணர்ந்துளோர்
நலனெலாம்பெறுவர்மாதோ.





முருகன் துணை.

# திருப்போரூர்
# பிரணவசைலமாலை.



காப்பு-வெண்பா.

சீரார்ப்ரணவகிரித்தியாககயிலாயபதி
பேரார்தமிழ்மாலைபேசுதற்கு-நேராக
நிம்பநிழற்கீழிருந்துநீடூழிவாழ்வளிக்குந்
தும்பிமுகன்பாதந்துணை.

வந்தனைபுரிந்துவழிதெரிந்துவந்துவல்வினையனைத்தையுந்துறந்து
சிந்தனைநயந்ததில்லையந்தணருன்றிருவடியடைந்தனரெளியேன்
முந்துதீவினையிற்றொடர்பறப்போரிமுருகனைமருவுநாளுளதோ
சந்தனப்பொழில்கணிறைவளர்பிரணவசைலனேகைலைநாயகனே. (௧)

ஏலவார்குழலாளுடன்சிவதீர்த்தமெய்திமூழ்கிடநினதருளால்
சீலமார்நீலகண்டனாரிவைமைதினைத்தருண்முற்றினரெளியேன்
காலன்வந்தணுகுந்தொடர்பறப்போரிக்கடவுளைக்கலக்குநாளுளதோ
சாலவுமுயர்ந்துகிளரொழிற்பிரணவசைலனேகைலைநாயகனே (௨)

அண்டருமறியாவமலனேநின்னையறிந்தரிவையையளித்தேத்திப்
பண்டைமாமலக்கோள்விண்டியற்பகையார்பதமடைந்துய்ந்தன ரெளி
யேன்,கொண்டலங்குழலார்தொடர்பறப்போரிக்குமரனைக்கூடுநாளுள
தோ,தண்டமிழ்ப்புலவர்துதி புரிபிரணவசைலனேகைலைநாயகனே. (௩)

பனிமலரொடுத்துப்பரிவுடன்சாத்துப்பத்தருக்கமுதமேயுள்ளக்
கனிவுடனிளசைமாறர்நின்சோதிக்காட்சிகண்டுவந்தனரெளியேன்
துனிசெய்மாயாலயத்தொடர்பறப்போரித்துய்யனைக்காணுநாளுளதோ
தனிதமால்தவழ்கோடுயர்தனிப்பிரணவசைலனேகைலைநாயகனே. (௪)

மாதவமிகுத்துமகிழ்ந்துனைத்துதித்துமறைநெறிநிகழ்திருவேடச்
சாதனம்பொருளாய்த்தேர்ந்தமெய்ப்பொருளார் சரணடைந்துய்ந்தன
னெளியேன்,பாதகத்தொழிலின்றொடர்பறப்போரிப் பதியனைப்பணியு
நாளுளதோ,தாதவிழ்மலர்க்காமருமணிப்பிரணவ சைலனேகைலைநாயக
னே. (௫)

சுந்தரமூர்த்திபுறகெனஅன்பாற் சொல்லலுமவர்தொண்டத்தொகைமு
தந்திடவுள்ளதெனும்விறல்மிண்டர்தருகணத்தோங்கினனெளியேன் [ன்
செந்துவர்வாயார்தொடர்பறப்போரிச்சேர்ந்தனைச்சேருநாளுளதோ
சுந்தரமமர்தொழவரும்பிரணவசைலனேகைலைநாயகனே. (௬)

அக்குமாமணிவெண்பூதிசாதனர்கட்கணிதருங்கோவணநல்கிப்
பக்குவமாயுட்பதித்தமர்நீதிபரகதியடைந்தனனெளியேன்
துக்கசாகரத்தின்றொடர்பறப்போரித்தோன்றலைத்தோயுநாளுளதோ
தக்கவான்புலவர்சூழ்பெரும்பிரணவசைலனேகைலைநாயகனே. (௭)

அந்திமேனியர்க்காமலர்களைச்சிதறும் யானையோடறவெறிந்தருளால்
சிந்துரத்துடன்மீண்டிடவெறிபத்தர்திருவடியணுகினனெளியேன்
பந்தமாம்வினையின்றொடர்பறப்போரிப் பரனடிவணங்குநாளுளதோ
தந்திரமனைத்தும்புகலும்வான்பிரணவசைலனேகைலைநாயகனே. (௮)

காதலத்துணைநீற்றினைப்பொருளாச்சாருமேனாதியார்மேலாய்
விராவுபேரின்பவமுதினையயின்றுவினைகடிந்துய்ந்தனனெளியேன்
கோரதகநெறியின்றொடர்பறப்போரிக்கேள்வனைவணங்குநாளுளதோ
சராசரமனைத்துமிறைஞ்சிடும்பிரணவ சைலனேகைலைநாயகனே.

மடைதிறந்தமுதவாரியையருந்திமருவுகண்ணப்பருண்மகிழ்ந்து
தடையகன்றுனதுதாளிணைநிழலிற்றங்கிவாழ்ந்துய்ந்தனனெளியேன்
கடைகடற்கண்ணார்தொடர்பறப்போரிக்கனிபெறக்கிடைக்குநாளுள
தோ, சடைமுடிமுனிவர்தவம்பயில்பிரணவசைலனேகைலைநாயகனே.

பரவுகுங்கிலியக்கலயனார்தினநுபணிபுரிந்துனைத்திருப்பனந்தாட்
புரமதினேராக்கச்சிலையந்துபொற்பதமருவினனெளியேன்
தரணியிற்பாசத்தொடர்பறப்போரித்தாணுவைக்காணுநாளுளதோ
சரணமென்றுலகமெலாம்பணிபிரணவசைலனேகைலைநாயகனே. (௰௧)

வஞ்சிநன்மணத்திற்குழலரிந்தளித்துமானக்கஞ்சாறனார்மகிழ்வாய்
நெஞ்சுறவாழ்ந்திநேயமேபுரிந்துநின்பதமடைந்தனனெளியேன்
கெஞ்சிறிலிரக்குந்தொடர்பறப்போரிக்கேள்வனைவணங்குநாளுளதோ
[illegible]தமொழித்துநலனருள்பிரணவசைலனேகைலைநாயகனே. (௰௨)

புக்கதோர்கமரிம்மாவடுவொலியும்பொற்கையுந்தோற்றிநின்றரிவாள்
சிக்கெனவிலக்கித்தாயனார்கண்டுன்சீர்ப்பதந்தொழுதனனொளியேன்
மைக்கணார்மயலின்றொடர்பறப்போரிவள்ளலைப்போற்றுநாளுளதோ
சக்கரதரன்வந்தேத்திடும்பிரணவ சைலனேகைலைநாயகனே. (௰௩)

வாரணிகொங்கையுமையவளிடப்பான்மன்னுநின்னைந்தெழுத்திசையச்
சீரணிகுழலிலோதியாளுயர்திருவடியடைந்தனனொளியேன்
பேரணிமடவார்தொடர்பறப்போரிப்பெரியனைப்பேணுநாளுளதோ
தாரணிகளிக்கவெழுதரும்பிரணவசைலனே கைலைநாயகனே. (௰௪)

அங்குலைச்சாத்தச்சந்தனமுழங்கையரைத்தெழிற்சடைமுடியாகப்
பொங்குலகாண்டமூர்த்தியாருனதுபொன்னடியடைந்தனனொளியேன்
மங்கையரின்பத்தொடர்பறப்போரிமன்னனைமருவுநாளுளதோ
சங்கணியொலிசெய்வயல்தவழ்பிரணவசைலனேகைலைநாயகனே. (௰௫)

பத்தியாய்நின்னைந்துருப்பன்மலர்பறித்துப்பரிவுடன்முருகனார் நிதமுஞ்
சித்தமேமகிழவருச்சனைபுரிந்துநல்சீர்ப்பதமடைந்தனனொளியேன்
புத்திராந்தாரமுந்தொடர்பறப்போரிப்புனிதனைப்புகழுநாளுளதோ
சத்தெனும்வேதமுதலதாம்பிரணவசைலனேகைலைநாயகனே. (௰௬)

அச்சினிலகாரமானநின்னுருவாமைந்தெழுத்துருத்திரங்கணித்து
நச்சிநின்றுருத்திரப்பசுபதிநின்றாட்டிணையடைந்தனனொளியேன்
துச்சமாங்கொடியதொடர் பறப்போரித்துணைவனையணையுநாளுளதோ
சச்சிதானந்தசொரூபவான்பிரணவசைலனேகைலைநாயகனே. (௰௭)

அற்புதவடிவையகத்துளேயறிந்தன்றருந்திருநாளைப்போவார்தாம்
பொற்பனல்மூழ்கிச் செழுஞ்சடைமுனியாய்ப்போந்துனையடைந்தன
னொளியேன், கற்பனையென்றுந்தொடர்பறப்போரிக்கடம்பனைக்காணு
நாளுளதோ,தற்பதமுடிவைத்தந்திடும்பிரணவசைலனேகைலைநாயகனே

பற்றுதல்விடுத்தலனைத்தையுமகன்றபாவனாதீதநின்பணியால் [யேன்
நற்றவக்குறிப்புத்தொண்டருன் திருத்தாள் நண்ணிநின்றுய்ந்தன னொளி
முற்றுநானென்றுந்தொடர்பறப்போரிமுதல்வனைமருவுநாளுளதோ
தத்துவமசியென்றொளிர்தரும்பிரணவசைலனேகைலைநாயகனே. (௰௯)

இதாகிதமதனைவிடுத்துனையன்பாலியற்றியபூசையைத்தவிர்த்த
பிதாவடியறவீசியசண்டேசுரருன்பெரும்பதமடைந்தனனொளியேன்
வுதாசினமானதொடர்பறப்போரிக்குரியனையுணருநாளுளதோ
சதாசுகமளிக்கும்பிரமவான்பிரணவசைலனேகைலைநாயகனே. (௨௰)

நாமமாக்கணமுந்தரித்திரோரமென்றுநாவினுக்கரையருள்மகிழ்ந்தாங்
கோமெனும்பொருளாம் பூம்புகலூரிலுனதருள்கலந்தனனொளியேன்
காமவேதனையின்றொடர்பறப்போரிக்கடவுளைக்கலக்குநாளுளதோ
தாமரைச்சுனைகளளவில்சூழ்பிரணவசைலனேகைலைநாயகனே. (௨௧)

போதநன்மார்க்கவகைதெரிந்தன்பாற்பொருளறிந்திடுங்குலச்சிறையார்
ஏதமில்லாதமதுரையினில்பொன் னிணையடிகூடினனொளியேன்
வாதமாஞ்சமையத்தொடர்பறப்போரிமகிபனைநாடுநாளுளதோ
நாதகிமணம்வாளுடுலாம்பிரணவசைலனேகைலைநாயகனே. (௨௨)

மதுமலர்ச்சோலைமிழலைவாழ்குறம்பர்வன்றொண்டர்கைலைமேவுறுநாள்
கதுமெனமூலநெறிவழிமேயகிக்கண்டனர்நின்பதமெளியேன்
முதுமதிமுகத்தார்தொடர்பறப்போரிமூலனைத்தேறுநாளுளதோ
சதுமறைமுனிவர்வணங்கிடும்பிரணவசைலனேகைலைநாயகனே. (௨௩)

இடதுகைமானும்வலதுகைமழுவுமிடையினிற்புலியதளசைய
நடமிடுபதத்தைக்காரைக்காலம்மைநயந்துகண்டுவந்தனனொளியேன்
விடயநிர்விடயத்தொடர்பறப்போரி விகிர்தனைப்புகலுநாளுளதோ
நடமெலாங்கோட்டுமாகிவர்பிரணவசைலனேகைலைநாயகனே. (௨௪)

இதமுறுநாவுக்கரையர்தம்பெயராலியலறநடத்தியப்பூதி [யேன்
சுதல்விடந்தீர்த்தங் கமுதுணமகிழ்ந்தன் றுனைப்பதங்கிடைத்தனனொளி
சதமெனுமுலகத்தொடர்பறப்போரிச்சதுரனைச்சாருநாளுளதோ
சததளகமலநிறைவயற்பிரணவசைலனேகைலைநாயகனே. (௨௫)

நிபமிலாநீலநக்கர்சீகாழிநிமலர்வந்தமுதுணக்களித்துச்
சுபமிகுபாணர்க்கிடமுடனீந்துனதுநெறிநண்ணினனொளியேன்
அபரமாம்பிறவித்தொடர்பறப்போரியண்ணலையெண்ணுநாளுளதோ
தபனனூர்சிகர மோங்கியபிரணவசைலனேகைலைநாயகனே. (௨௬)

சர்க்கரைதேன்பால்பாகெனுநினதுசந்நிதிதன்னினன்னீரா
லொக்கவேவிளக்கிட்டுயர்நமிநந்தியுத்தமர்முற்றினனொளியேன் [தோ
தொக்கவெந்துயரத் தொடர்பறப்போரித் துணைவனைக்கணிக்குநாளுள
தக்கவானவர்தோத்திரம்புரிபிரணவசைலனேகைலைநாயகனே. (௨௭)

வாதுசெய்தெதிர்த்தவஞ்சவெஞ்சமணவல்லிருளகற்றிவண்டமிழ்ப்பா
வோதுசீகாழிஞானசம்பந்தருன்னுடனுற்றனனொளியேன்
தீதுறுநரகத்தொடர்பறப்போரித்தேவனைத்தேடுநாளுளதோ
தாதுசேர்மலர்ப்பூஞ்சோலைசூழ்பிரணவசைலனேகைலைநாயகனே.(௨அ

மேவியவுயர்கோல்கலிக்காமர்விரவுவன்றொண்டர்நட்பாகி
யாவியோடுடுக்கும்படியருள்புரியவருள்நெறிப்புகுந்தனனெளியேன்
காவிவாள்விழியார் தொடர்பறப்போரிக்கத்தனைமுந்துநாளுளதோ
தாவிவானரம்வான்றருத்தொடும்பிரணவசைலமேன்கைலைநாயகனே. [௨௯

ஆதிநாட்டிருவாவடுதுறைமேவியாண்டுக்கோர்கவிசொலிக்கயிலைச்
சோதியுட்டிருமூலருங்கலந்துயர்ந்து சுகவுருவாயினனெளியேன்
நீதியில்மாயைத்தொடர்பறப்போரிநிமலனைநினைக்குநாளுளதோ
சாதிகூவிளங்குங்குமதிறைப்பிரணவசைலமேன்கைலைநாயகனே. (௩௰)

தகவிலாவடமணர்கலங்கிடவருளாற் றமதுகண்விழித்தொருத்தாகம்
புகாறக்கண்டுதிருத்தண்டியடிகள்பொருந்தினர்நின்பதியெளியேன்
இகழ்வுடன்புகழின்றொடர்பறப்போரியெந்தையைக்கூடுநாளுளதோ
சகமுயிர்பரமென்றுணர்வரும்பிரணவசைலமேன்கைலைநாயகனே. (௩௧)

விமலமாம்வேதர்கட்டூரில்வாழ்மூர்க்கர் விரவுறுசூதுவெல்பொருள்கொ
ண்டமைசுவையமுதமன்பர்கட்களித்துன்னடிநிழற்புகுந்தன ரெளியே
ன், சுமைபெறும்பாவத்தொடர்பறப்போரிச் சோதியைச்சூழுநாளுள
தோ,சமயவாதத்திலகப்படாப்பிரணவசைலமேன்கைலைநாயகனே. (௩௨)

காமனைமுனிந்து சோமனைத்தரித்துக்குருது வோருளத்தினிலிருந்து
மாமனைத்தடிந்தோயென்றசோமாசிமாறனார்விதினரெளியேன்
தாமதகுணத்தின்றொடர்பறப்போரித்தலைவனைத்தாழுநாளுளதோ
தாமரையிருந்தாடவம்புரிபிரணவசைலமேன்கைலைநாயகனே. [௩௩]

எமதுநாயகமேயெந்தையேயிறையே யென்றுகன்மலர்கொள்சீசித்துச்
சமரசஞானச்சாக்கியருன்றுசரணடைந்துய்ந்தனரெளியேன்
பிமரவன்றுயரத்தொடர்பறப்போரிப்பிரானைவந்திக்குநாளுளதோ
தமதியங்கொழிக்குமருவிசூழ்பிரணவ சைலமேன்கைலைநாயகனே. (௩௪)

மந்திரமறையாகமநெறிவிடாது மருவுமெய்யன்பர்கட்கமுதம்
மூ.நிதுறவுதவிமகிழ்சிறப்புலியார்முதுபயனீடினரெளியேன்
வெந்துயர்வேலைத்தொடர்பறப்போரிமேவலனைவணங்குநாளுளதோ
தந்திகேசரியோ டன்புகொள்பிரணவ சைலமேன்கைலைநாயகனே.(௩௫)

பெருகுமெய்யன்புபிரிந்திடாதின்றமிழ்ளையக்கறிசமைத்தளித்து
வருசிறுத்தொண்டர்மகவொடுமகிழ்ந்துன்மலர்ப்பதங்கூடினரெளியேன்
இருடருஞ்செனனத்தொடர்பறப்போரிக்கினியனைவாழ்த்துநாளுள
தருமிசைவாழ்மீன்பூத்தலர்பிரணவசைலமேன்கைலைநாயகனே. [௩௬

தொகைசெறிசேரர்கோன்கயிலைக்குச்சுந்தரர்பின்புகுந்தணிகூர்
வகைசெறியாதியுலாப்பகர்ந்துனதுவான்பதியடைந்தனனொளியேன்
புகைதருகோபத்தொடர்பறப்போரிப் புனிதனைப்போற்றுநாளுளதோ
தகைமைகொளன்பர்பணிந்திடுப்பிரணவசைலனேகைலைநாயகனே.

அரக்குவெந்தழலிலுருகுதல்போலவகங்கனிந்தெழிற்கணநாதர்
மருக்கமழ்மலர்ப்பாமலரொடுஞ்சாத்திவான்பதமெய்தினனொளியேன்
இரக்கும்வெவ்வாசைத்தொடர்பறப்போரிச்சுகுணனைச்சூழுநாளுளதோ
தரக்கொடுபுல்வாய்நண்புகூர்பிரணவசைலனேகைலைநாயகனே. (௫௮)

பாரினிலுனதுபொன்னடிமுடியாப் பரிந்துகொண்டுலகெலாங்காத்துச்
சீரியவொழுங்கூற்றுவர்பணிபுரிந்துன்றிருவருளடைந்தனனொளியேன்
நாரியர்வலையின்றொடர்பறப்போரிநாதனைநாடுநாளுளதோ
சாரிகைமடவார்போலிசைபிரணவசைலனேகைலைநாயகனே. (௫௯)

அங்கையில்நெல்லிக்கனியதுபோலவையநின்னருள்கொடுநாற்பாப்
பொங்குறச்சொலிப்பொய்யடிமையில்லாதபுலவர்வீ டடைந்தனனொளி
மங்குறுவினையின்றொடர்பறப்போரிவாணனைமருவுநாளுளதோ [யேன்
சங்கொலிசெயும்நீடங்கிளர்பிரணவசைலனேகைலைநாயகனே. (௬௰)

தமரடிபணிவார்சமரினிற்கொணர்புன் சடைமுடித்தலைமிசையேற்றி
யமரர்கண்களிக்கவருட்புகழ்ச்சோழ ரனல்குளித்துய்ந்தனனொளியேன்
திமிரவல்வினையின்றொடர்பறப்போரித் தேவனைவணங்குநாளுளதோ
தமமொழிவுறமாமணியொளிர்பிரணவசைலனேகைலைநாயகனே. (௬௧)

பரர்நிதம்வணங்குநரசிங்கமுனையார்பரமநின்றாளினிலடியார்க்
குரமுடனம்பொனமுதளித்தொளிர்வெண்ணீறணிந்துய்ந்தன னொளியே
விரகம்வேதனையின்றொடர்பறப்போரிவேலனைவணங்குநாளுளதோ [ன்
சரகநீடிமுல்சூழ்ந்தொலிகெழுபிரணவசைலனேகைலைநாயகனே. (௬௨)

தலங்கிளர்வேலைவலைப்படுமீனில்நாடொறுமுதல்வருமீனுன் [ன்
பொலன்கிளர்கழற்கேயென்றறிபத்தர்பொருவில்வீடடைந்தனனொளியே
மலங்குறுமுலகத்தொடர்பறப்போரிமன்னனையுன்னுநாளுளதோ
சலஞ்சலந்தவழும்வயல்நிறைபிரணவசைலனேகைலைநாயகனே. (௬௩)

துவளறுமன்பர்பூசைசெய்தில்லாள் துணைக்கரமெறிந்தவள்பணியுந்
திவளுறத்தாமேபுரிகலிக்கம்பர்சேர்ந்தனருன்பதமெளியேன்
குவளைநேர்விழியார்தொடர்பறப்போரிக்குகன்றனைக்கூடுநாளுளதோ
தவளமாமதிசூழ்குவடுயர்பிரணவசைலனேகைலைநாயகனே; (௬௪)

முந்தியதீபப்பணிசெயுங்கலியர்முதுபொருள்கிடைத்திடாதிரத்தஞ்
சிந்திடமிடற்றறையரிந்திடர்தடுத்துச்சேவடியடைந்தனனொளியேன்
தொந்தவெம்பகையின் றொடர்பறப்போரித் தோன்றலைப்பரவுநாளுள
தந்திடையரம்பைமாதர்வாழ்பிரணவசைலனேகைலைநாயகனே. [தோ

மனதினின்னடியார்தமைவசைமொழிவோர்மன்னுநாவறுப்பதேதொண்
யுன்தருளுவந்தசத்தியார்மேவியுயர்கதியடைந்தனனொளியேன் [டா
கனவுறுமுலகத்தொடர்பறப்போரிக்கந்தனைத்தேறுநாளுளதோ
சனகனாதியருக்கருள்செயும்பிரணவசைலனேகைலைநாயகனே. (௪௬)

மகதிறைபுலியூர்முதற்பதிதோறும்வரின்சவெண்பாவளம்பாடி
யகமுகமாவையடிகள்காடவர்கோனறிந்துனைப்பணிந்தனனொளியேன்
இகலயுறவின்றொடர்பறப்போரிக்கிறைவனையிறைஞ்சுநாளுளதோ
சகலதெய்வமும்வந்தேத்தல்செய்பிரணவசைலனேகைலைநாயகனே. ()

சொற்பதங்கடந்தபுலீச்சுரத்துனக்குச்சுடரிடுவார்க்கதுவிசையா
நற்சிகைவிளக்கிட்டன்பராங்கணம்புல்நாயனார்வீறினனொளியேன்
அற்பமாமுலகத்தொடர்பறப்போரியையனையடையுநாளுளதோ
தற்பராநந்தாரகப்பிரணவசைலனேகைலைநாயகனே. (௪௮)

செந்தமிழ்நூல்தேர்ந்தரசர்மூவனாயஞ்சேர்ந்தவைநயமுறத்தம்பொன்
வந்தனகொண்டுகாரியார்கோயில்வளம்பணித்தடைந்தனனொளியேன்
அந்தகன்பாசத்தொடர்பறப்போரியமலனைவணங்குநாளுளதோ
சந்திரனிரவிதவழ்முடிப்பிரணவசைலனேகைலைநாயகனே. (௪௯)

அடலறச்சமணவஞ்சனையொழித்தேயாளுடைப்பிள்ளையாரருளாற்
பிடனுறுவீடுபெற்றுளார்நின்றசீர்நெடுமாறனாரொளியேன்
படவடிவகலார்தொடர்பறப்போரிப்பதியனைப்பணியுநாளுளதோ
தடமலர்வனங்கள்புடைகொளும்பிரணவசைலனேகைலைநாயகனே.(௫௰)

சிவத்தொழினீங்காமானதப்பூசைதிருந்திடக்கனிவினாலியற்றி
யுவப்பொடுமயிலைவாயிலார்தாமுமுனதருளடைந்தனனொளியேன்
அவத்தொழிலென்னுந்தொடர்பறப்போரியண்ணலையறியுநாளுளதோ
தவத்தினருளம்போல்நிறைந்தெழுபிரணவசைலனேகைலைநாயகனே. ()

மேவுமெய்யடியார்தமக்கமுதென்றும்வியந்திடுமூனையடுவார்வன்
மாவுரியாய்நின்மலர்ப்பதநிழலின்மருவியுண்மகிழ்ந்தனனொளியேன்
பூவுலாங்குழலார்தொடர்பறப்போரிப்புரவலற்சேருநாளுளதோ
தாவுமற்கடம்வானோக்கிடும்பிரணவசைலனேகைலைநாயகனே. ௫௨

கலைமதிநுதலாள்மூக்கினையரியக்கண்டெனக்காமலைகொடுத்த
தலைவிலைதடிந்துகழற்சிங்கவரையர்தண்ணருளடைந்தனரொளியேன்
புலைகொலைகளவின்றொடர்பறப்போரிப்புனிதனைப்போற்றுநாளுளதோ
தலைமைசேர்வேதமூதலெனும்பிரணவசைலனேகைலைநாயகனே. (௫௩)

ஊன்னெலாமுருகவடியர்க்குவேண்டுபொன்பொருளுந்தவிநின்கோயிற்
கானபுண்ணியங்கள்புரிந்திடங்கழியராருணிலையடைந்தனரொளியேன்
யானெனதென்னுந்தொடர்பறப்போரியத்தனையடையுநாளுளதோ
நானெனும்பற்றற்றவர்பணிபிரணவசைலனேகைலைநாயகனே. (௫௪)

செருத்துணைநாயனார்படிவீழ்ந்ததேமலர்மோந்துபல்லவர்கோன்
அருத்திகொள்பன்னிமூக்கரிந்துன்றாட்கன்பினின்மூழ்கினரொளியேன்
கருத்துயர்புகும்வெந்தொடர்பறப்போரிக்கடவுளைக்கருதுநாளுளதோ
தருத்தலைவான்மீன்மலர்தரும்பிரணவசைலனேகைலைநாயகனே. (௫௫)

முத்திதந்தருளுந்தினக்கசத்தடிமைமுன்னியபுகழ்த்துணையார்நின் [னீ
பத்தியர்கொருபொற்காசுபெற்றனதாள்பரிந்துலையடைந்தனரொளியே
பித்தெனுமயக்கத்தொடர்பறப்போரிப்பிரான்றனைவணங்குநாளுளதோ
சத்திநிபாதமுற்றவர்சூழ்பிரணவசைலனேகைலைநாயகனே. (௫௬)

களித்துலக்கண்மத்தநெற்குவைவழித்தகழிபெருங்கிளைஞராவிசித்
தெளித்தகோட்புலியார்தந்நிலைநிறுத்துத்தேறினருனதருளொளியேன்
அளித்திரட்குழலார்தொடர்பறப்போரியையனைவணங்குநாளுளதோ
தளிர்த்திடுஞ்சோலைவான்மலிபிரணவசைலனேகைலைநாயகனே. (௫௭)

அத்தனின்னடியர்டித்தொழில்பூசையாற்றுதன்முதலிருநான்காம்
பத்தியிற்பதிந்துபத்தராய்ப்பணிவார்பயனடைந்துய்ந்தனரொளியேன்
மித்தையாமுலகத்தொடர்பறப்போரிமெய்யனைமேவுநாளுளதோ
தத்தைமென்மொழிவானரம்பைசூழ்பிரணவசைலனேகைலைநாயகனே.()

நண்புறுந்தமிழால்வடகலைச்சொல்லால்நல்லருளார்க்கவிபாடிப்,
பண்புயர்பத்தியாற்பரமனையேபாடுவாருய்ந்தனரொளியேன்
மண்பொன்மாதர்களாந்தொடர்பறப்போரிவாசனையுணருநாளுளதோ
தண்புயல்விற்கொண்டரிநிகர்பிரணவசைலனேகைலைநாயகனே. (௫௯)

உண்முகமாவைட்புலன்முதனிலைக்கவுள்ளருள்வடிவுகண்டுவந்து
வண்மணியானசித்தத்தைச்சிவன்பால்வைத்தனர்பெற்றனரொளியேன்
பெண்மயலென்னுந்தொடர்பறப்போரிப்பிரான்றனை வணங்குநாளுள
சண்முகத்தெய்வவடிவெனும்பிரணவசைலனேகைலைநாயகனே. [தோ,

கண்ணியநான்குவருணரல்லாதகவினுள்ளார்மாதவருள்ளார்
புண்ணியராளூர்ப்பிறந்தாளாரெவரும்பொன்னடியடைந்தனரொளியேன்
பண்ணினோர்மொழியார்தொடர்பறப்போரிப் பதியினைப்பரவுநாளுள
தோ,தண்ணிலாமுடிமேற்றவழ்தரும்பிரணவசைலனேகைலைநாயகனே.

பூண்டமெய்ந்நியதியைந்தெழுத்தோதிருப்பொழுதுந்திருமேனி
தீண்டுவார்தினதாகமவிதிமுயன்றுசேவடிப்படைந்தனரொளியேன்
ஈண்டியபோகத்தொடர்பறப்போரியெந்தையைப்போற்றுநாளுளதோ
தாண்டவமயூரம்புரிபொழிற்பிரணவசைலனேகைலைநாயகனே. (௯௨)

சிற்பமாங்கற்பமுத்திருநீற்றைத்திரிபுண்டமாதியாவணிந்து
பொற்பதமனுவினோர்முழுநீறுபூசிமுனிவரொளியேன்
பற்பலவாசைத்தொடர்ப்பறப்போரிப்பரம்புகழ்பாடுநாளுளதோ
தற்பரவிசுவாதீதமாப்பிரணவசைலனேகைலைநாயகனே. (௯௩)

தெளிதமிழ்நாட்டினப்புறத்திருந்தோர்திருத்தொண்டத் தொகையினிலு
ளோர், அளியினப்பாலுமடிச்சார்ந்தோரென்ன அருங்கதியடைந்தன
ரொளியேன், ஒளிவளைக்கையார்தொடர்ப்பறப் போரியுனைவனை வணங்குநா
ளுளதோ, தளிவளர்சிறப்பு நிறைகொளும்பிரணவ சைலனேகைலைநாய
கனே. (௯௪)
அவத்தைபொன்றின்றி யிதயவாலஞ்செய் தையநின்னருள் வடிவமைத்
சிவத்திணிலொடுங்கிப்பூசலாரின்பச்சிற்சுகமடைந்தனரொளியேன் [தும்
அவத்தொழிலெலாந்தொடர்பறப்போரிக்கதிபனை யணையுநாளுளதோ
தவத்தினர்தினமுமவலம்வரும்பிரணவசைலனேகைலைநாயகனே. (௯௫)

சித்திரப்பாவையொத்தபேர்வனப்புத்திகழ்தருமங்கையர்க்கரசி
முத்தர்சீகாழிநித்தனைப்புகழ்ந்தாமூவினோர்நின்னருளொளியேன்
நத்தருப்வஞ்சத்தொடர்பறப்போரிநாதனைமெய்த்துநாளுளதோ
தத்துவஞானந்தமாம்பிரணவசைலனேகைலைநாயகனே- (௯௬)

களையிலாத்தொண்டர்க்காடையுங்கீளுங்கருத்தாகோவணமுநல்களித்து
வளைவிலாநின்றுணேசனார்பெற்றுமகிழ்ந்திடவாழ்ந்தனரொளியேன்
நரைதிரைமூப்புத்தொடர்பறப்போரிநம்பனைமருவுநாளுளதோ
தலையுளோர்வானோர்சரணெனுப்பிரணவசைலனேகைலைநாயகனே(௯௭

திரிபுரமெரித்தாயுநின்பெருங்கோவிற்சிறப்புறவுலகெலாமமைத்துப்
பெரியகோச்செங்கட்சோழனார்நினதுபேரருளடைந்தனரொளியேன்
விரிவுறுமனத்தின்றொடர்பறப்போரிமெய்யனைவணங்குநாளுளதோ
சரியினிலருவிமணிமேசாரிபிரணவசைலனேகைலைநாயகனே- (௯௮)

குழையணிசெவியாய்சிரபுரக்கோமான்குலத்தமிழ்யாழினிலேற்றிப்
பிழைதவிர்நீலகண்டயாழ்ப்பாணர்பேரருளடைந்தனரொளியேன்
விழைவொடுபகையின்றொடர்பறப்போரிவிமலனைவணங்குநாளுளதோ
தழைவிரியிதழிப்பொன்பொழிபிரணவசைலனேகைலநாயகனே. (௬௯)

ஆலறநின்னுரியதோழரென்றுரைக்குமன்னலார்தமக் கொருமகவாய்த்
தோன்றிடத்தவஞ்செய் சடையனார்மேலாந் தொன்மைபெற்றுண்டன
ரொளியேன், ஊன்றுமாணவவன்றொடர்பறப்போரிக் கொருவனைவணங்
குநாளுளதோ,சான்றவரிதயாதனநிகர்பிரணவசைலனேகைலநாயகனே

சுந்தரமூர்த்திதம்மிடையுதிக்கத்தொல்பெருந்தவம்புரிந்தாரென்
றந்தமிழுலகம்புகழிசைஞானியாருனதருள்பெற்றாரொளியேன்
கொந்தலர்குழலார்தொடர்பறப்போரிக்குரவனைப்பணியுநாளுளதோ
சந்திரதிலகமணஞ்செயுப்பிரணவசைலனேகைலநாயகனே. (௭௧)

கோளினையகன்றபரவையார்தமக்குக்குளத்தினிற்பொன்வரவதைத்தன்
றாளிணைத்துதித்துநாவலூரரசர்தந்திமேல்வந்தனரொளியேன்
நீளிருட்பௌவத்தொடர்பறப்போரிநித்தனைப்பற்றுநாளுளதோ
தாளியினெடுங்கைம்மாவொலிபிரணவசைலனேகைலநாயகனே. (௭௨)

காலமோர்மூன்றுங் கடந்தநின்வடிவைக் கருத்தினிலிருத்துமெய் யடி
மை, யேலவொண்டிலத வதியம்மைநின்றுளெய்திவாழ்வோங்கினரொளி
யேன், ஆலநேர்விழியார் தொடர்பறப்போரி யப்பனையடையுநாளுள
தோ, தாலமன்னுயிர்களுய் யநின்பிரணவசைலனேகைலநாயகனே (௭௩)

புலப்பகையொழித்தஞானசம்பந்தர்புகழ்துதித்தருணைதிமுன்னி
நலத்தநன்மலர்கடூய்ச்சிவநேசர்நற்சரணடைந்தனரொளியேன்
அலத்தகப்பதத்தார்தொடர்பறப்போரியநகனையறியுநாளுளதோ
தலத்தினிலெவருந்தொழவருள்பிரணவசைலனேகைலநாயகனே. (௭௪)

சனமிகுமுனைநற்பெருமையையுணர்ந்துகாழியர்கோன்றிருவருளால்
முனமவதரித்தநங்கம்பூம்பாவைமுதிரருளடைந்தனரொளியேன் தோ
சினமெனுமிரும்பைத்தொடர்பறப்போரிச் செல்வனைச்சேருநா ளுள
தனபதிமுதலெண்மருந்தொழும்பிரணவசைலனேகைலநாயகனே.(௭௫

கரைபெருவெள்ளப்பெருக்கெனவுள்ளங்கனிசிவகோசரியாரும்
விரைநறுமலர்ச்சந்தனநன்னீராட்டிவிழைந்துவணங்கினரொளியேன்
திரைகடற்பிறவித்தொடர்பறப்போரிச்சேந்தனைநண்ணுநாளுளதோ
தரைமகட்கணிமாமகுடமாம்பிரணவசைலனேகைலநாயகனே. (௭௬)

பண்பயில்வண்டுபடாமலர்பறித்துப்பரிவுடன்றூவிநின்றிறைஞ்சித்
திண்பவமொழித்துச்சிவகாமியாண்டார் திருவருளடைந்தனமொளியே
னுண்டதேயுண்ணுந்தொடர்பறப்போரியுத்தமற்புணருநாளுளதோ
சண்பகச்சோலைமணமருப்பிரணவசைலனேகைலைநாயகனே. (௭௭)

நந்தியீசனுநான்முகத்தேவுநாரணன்முதலமரர்களும்
வந்தியாநின்றருள்வழிவழியாகவணங்கிவாழ்வடைந்தனமொளியேன்
இந்திரஞாலத்தொடர்பறப்போரியிறைவனையிறைஞ்சுநாளுளதோ
தந்திமாமுகனையீன்றிடும்பிரணவசைலனேகைலைநாயகனே. (௭௮)

அந்தியும்பகலும்அறுபத்துமூவர்அடைந்திடும்பேற்றினைப்புகழ்ந்து
சிந்தனையுவந்தசேக்கிழாருனதுதிருவடியடைந்தனமொளியேன்
முந்திவ்வினையின்றொடர்பறப்போரிமுருகனைப்பணியுநாளுளதோ
சந்திரன்றவழுங்குவடுயர்பிரணவசைலனேகைலைநாயகனே. (௭௯)

தும்புருவிணைநாரதராதிதுதித்துளங்களித்துனைப்புகழ்ந்தே
அம்புயமலராலருச்சனைபுரிந்துன் அருளடைந்துய்ந்தனமொளியேன்
வம்புபொய்கவலின்றொடர்பறப்போரிவள்ளலைவணங்குநாளுளதோ
சப்புவால்றருக்கள்நிறைதரும்பிரணவசைலனேகைலைநாயகனே. (௮௰)

பகுத்துணரறிவிற்கலக்கமற்றிருந்துபதஞ்சலியொடுபுலிமுனியும்
தொகுத்துளங்களித்தார்பிருங்கிநின்றிருத்தாடொழுதுவாழ்ந்துய்ந்தன
மொளியேன், வருந்தவிவ்வுலகத்தொடர்பறப்போரி வாணனைவழுத்துநா
ளுளதோ, சகத்தினில்மிகுந்தமகத்துவப்பிரணவ சைலனேகைலைநாயக
னே. (௮௧)

ஆரணமுதலாறங்கமாகமங்களையவென்றநாதனைமிறைஞ்சிப்
பூரணாநந்தநிலைதனைத்தெரிந்துன்புகழ்சொலிப்பணிந்தனவெளியேன்
பாரமாங்குடும்பத்தொடர்பறப்போரிப்பதியனைப்பணியுநாளுளதோ
சாரலினரிமாமுழங்கிடும்பிரணவசைலனேகைலைநாயகனே. (௮௨)

பூமகன்முனிவன்சாபமேநீங்கப்பூசித்துநிதம்வலம்வந்து
நேமமாநினைந்துன்னிலைபிறழாமல்நின்பதந்தொழுதனமொளியேன்
காமவெங்களங்கத்தொடர்பறப்போரிக்கந்தனைக்காணுநாளுளதோ
தாமம்மேசொரியும்பொழிறவழ்பிரணவசைலனேகைலைநாயகனே. (௮௫)

நாமரூபத்தினாட்டமேயொழிந்துநன்னெறியிஃதெனவறிந்தே
யோமமனுப்பதத்தை புனிச்சுகயோகருண்மையையடைந்தன மொளியே
நேமமில்லாததொடர்பறப்போரிநேசனைநினைக்குநாளுளதோ [ன்
சாமவேதியர்கள்துதிசெயும்பிரணவசைலனேகைலைநாயகனே. (௮௪)

உவரிநீரனைத்துமகங்கையிலெடுத்துண்டிடுகும்பமாமுனிவர்
தவமிலாவின்பம்பெருகநின்ஞானத்தண்ணமுதடைந்தனமொளியேன்

தூவரிதழ்மடவார்தொடர்பறப்போரிச்சுடர்பதம்பரவுநாளுளதோ
தூவநிதியடுத்தோர்க்குதவுறும்பிரணவசைலனேகைலைநாயகனே. (௮௫)

சமரசநிலையைச்சார்ந்துமெய்ந்நெறியாற்சந்ததம்பூசனைபுரிந்து
நமன்வலியடக்கிமார்க்கண்டொழியாநலங்கொடுநின்றனனெளியேன்
தமரவிண்டோற்றத்தொடர்பறப்போரித்தந்தையைத்தாழுநாளுளதோ
தமனியகிரியிற்புகழ்மிகும்பிரணவசைலனேகைலைநாயகனே. (௮௬)

பிணக்கிலாதுயர்ந்தபெருந்துறைக்கன்னைப்பெருக்கியவாதவூரனையர்
இணக்கமுற்றன்றுதிருமறையோதியிலொளிகலந்தனனெளியேன்
கணக்கிலாப்பிறவித்தொடர்பறப்போரிக்கடம்பனைக்காணுநாளுளதோ
துணைப்பினுவலைத்தத்துவந்தரும்பிரணவசைலனேகைலைநாயகனே. ( )

மாதுபாகத்தமால்விடையேறுமணியெனவுணர்வசவேசர்
வாதுளாகமத்தின்வழிபிறழாமல்வந்தனைபுரிந்தனனெளியேன்
சூதுவாதென்னுந்தொடர்பறப்போரிச்சுகுணனைச்சூழுநாளுளதோ
தாதுமாதவர்கடழைத்திடும்பிரணவசைலனேகைலைநாயகனே. (௮௮)

பாரகமனைத்துநீயெனவறிந்துபாசவெம்பகைதனைத்துறந்து
சீரகங்குழைந்துசிவப்பிரகாசர்சிவபதியடைந்தனனெளியேன்
காரகமயக்கத்தொடர்பறப்போரிக்காளையைக்கலக்குநாளுளதோ
தாரகசொரூபஜோதியாம்பிரணவசைலனேகைலைநாயகனே. (௮௯)

பட்சமேமிகுந்துபங்கயாதனத்திற்பயிற்றுமெய்ப்பதிநிலையறிந்தே
புட்சுவையமுதுண்டுவந்துசாந்தையருமையையடைந்தனனெளியேன்
கட்செவிவாரைத்தொடர்பறப்போரிக்கண்ணனைத்துதிக்குநாளுளதோ
சட்சமயத்துற்றலைமைசேர்பிரணவசைலனேகைலைநாயகனே. (௯௰)

பெண்மயலகன்றகுருநமசிவாயப்பெற்றியோர்யோகசாதனையால்
கண்மணியதனைவிண்ணுறநோக்கிக்கண்நடங்கண்டனனெளியேன்
உண்மையலானதொடர்பறப்போரிக்கொருவனைப்புணருநாளுளதோ
தண்மணியொளிவானுலாவுறும்பிரணவசைலனேகைலைநாயகனே. (௯௧)

ததாகாரமானவருட்பிரகாசதாரகப்பொருளினையறிந்து
நிதானமாமவுனமுனிவருண்மகிழ்ந்துநினதருளடைந்தனனெளியேன்
இதாகிதமென்னுந்தொடர்பறப்போரியெந்தையையேத்துநாளுளதோ
சதாசிவரூபநிட்களபிரணவசைலனேகைலைநாயகனே. (௯௨)

மிஞ்சிடுகாமவெருளினைமறந்துமெய்த்தவவழியினைத்தெரிந்து
தஞ்சமென்றிருந்துதாயுமானவருந்தற்பதமடைந்தனனெளியேன்
கொஞ்சியமொழியார்தொடர்பறப்போரிக்குமரனைக்கூடுநாளுளதோ
சஞ்சலமெவர்க்குந்தீர்த்தருள்பிரணவசைலனேகைலைநாயகனே. (௯௩)

பதமெனும்பயனைப்பண்புறத்தெரிந்தபட்டணத்தார்நிலைநேர்குறிப்பா
லிதமுறக்கருதியேகபாமகன்றவின்பவீடடைந்தனனொளியேன்
மதர்மிகுபோகத்தொடர்பறப்போரிவரனருள்மருவுநாளுளதோ
சதமகனாதியோர்பணிபிரணவசைலனேகைலைநாயகனே. (௯௪)

அகநெகிழ்ந்துருகியருந்தவமியற்றியவத்தொழிலனைத்தையுமகன்று
பகாரசியற்றும்பத்திரகிரியார்பதியடைந்துய்ந்தனனொளியேன்
சுகமிலாப்போகத்தொடர்பறப்போரித்தோன்றலைவணங்குநாளுளதோ
சகலசித்திகளுந்தந்திடும்பிரணவசைலனேகைலைநாயகனே. (௯௫)

அருவிதுவென்னுமறிவினன்னிலையிலஞ்சவறவிருந்துமுன்கீரர்
மதியமுதருந்திமயலகன்றனதுமலர்ப்பதமடைந்தனனொளியேன் (தோ
பொதுமடமகளிர்தொடர்பறப்போரிப்பொருடனைப் போற்றுநாளுள்
சதுமறைமுடிவுமுதலுமாம்பிரணவசைலனேகைலைநாயகனே. (௯௬)

நகளகன்றுளத்திற்றுதித்தநுநின்முத்தொழுதிடேஞ்சொருபவானத்தர்
நகளியினெய்யுட்டிரிச்சுடரொளிபோற்றுன்றுவாயினனொளியேன்
மகளிர்செய்யின்பத்தொடர்பறப்போரிமன்னனைமருவுநாளுளதோ
சகளநிட்களதேஜோமயப்பிரணவசைலனேகைலைநாயகனே. (௯௭)

பாலினுட்கலந்துதோன்றுநெய்யைப்பகுத்திடும்பாலையாநந்தர்
காலினற்கனலைமூட்டியேயெழுப்பிக்கனவெளிகலந்தனனொளியேன்
கூலியின்பயனுந்தொடர்பறப்போரிக்குரவனைக்கூடுநாளுளதோ
சாலிசூழள்ளற்பழனமார்பிரணவசைலனேகைலைநாயகனே. (௯௮)

பர்வகாலத்திற்சிதம்பரமுனிவர்பரமெனும்பூரணமறிந்து
நிர்விஷயார்த்தசரணகலாமனேர்த்துவந்துய்ந்தனனொளியேன் (தோ
கெர்வமாந்தொழிலின் றொடர்பறப்போரிக் கேள்வனைக் காணுநாளுள்
சர்வலோகாதியாதாரப்பிரணவசைலனேகைலைநாயகனே. (௯௯)

அந்தநாளதனிலன்புடனியானையழகியசிலம்பிவெவ்வரவம்
முந்துதீவினையையகன்றுநின்திருத்தாண்முயன்றருச்சித்தனவெளியேன்
விந்தைசேர்வினையின்றொடர்பறப்போரிவிசாகனைப்பணியுநாளுளதோ
சந்தமால்வரைநேர்வளமுறும்பிரணவசைலனேகைலைநாயகனே. (௱)

நாதநாதாந்தங்கடந்தமெய்ப்பொருளேநான்மறைமுடிவினிற்றெருளே
போதமுங்கடந்தபூரணவெளியேபொய்யினைமெய்யெனுமெனையும்
ஏதமிலாமலாட்கொளப்போரிக்கிறைமுருகனுக்கிசைத்தருள்வாய்
சாதனயோகமுனிவர்சூழ்பிரணவசைலனேகைலைந[illegible] (௱௧)

திருப்போரூர்ப்பிரணவசைலமாலை

முற்றுப்பெற்றது.



